A GUIDE TO DRAVIDASTAN

# திராவிடஸ்தான்

By

திரு. S. முத்தையா முதலியார், C. I. E.
Ex. Minister Govt. of Madras.

# திராவிடஸ்தான்

By

உயர் திரு :

S. முத்தையா முதலியார், B.A., B.L., C.I.E

(EX. MINISTER GOVERNMENT OF MADRAS)

# பதிப்புரை.

சென்ற ஜூன்-மீ மத்தியில் திருச்சியில் நடைபெற்ற திராவிடர் மாநாடு சரித்திர முக்கியத்துவம் வாய்ந்ததாகும். அம்மாநாட்டின் தீர்மானமே 1—7—47-ல் திராவிடமெங்கும் 'திராவிடநாடு பிரிவினைநாள்' கொண்டாட வேண்டுமென்பதாகும். இப்படிப்பட்ட சிறந்த மாநாட்டிற்குத் திராவிடர்களில் எல்லாவற்றாலும் சிறந்தவரும், தகுதிவாய்ந்தவருமான உயர்திரு. எஸ். முத்தையா முதலியார், பி.எ.பி.எல். சி. ஐ. இ. அவர்கள் தலைமை தாங்கினார். தலைமைப்பிரசங்கம் ஆங்கிலத்தில் மட்டும் அதுவும் சொற்ப பிரதிகளே அச்சிடப்பட்டது. பத்திரிகைகளிலும் சரிவர வெளிவரவில்லை. அறிவும்—ஆராய்ச்சியும்—அநுபவமும் நிரம்பிய அவரது பொன்மொழிகள் நம் மக்களிடத்தில் பரவ அவருடன், நாமும் விரும்பினோம். இதன் மொழிபெயர்ப்பும், சில திருத்தச் சேர்க்கைகளுமே இச்சிறு நூல்.

திராவிடநாடு அல்லது திராவிடஸ்தான் நாம் ஏன் கோருகிறோம்? எத்துணை நியாயமான கோரிக்கை? என்ற வரலாறுகள் நன்கு எடுத்துக்காட்டப்பட்டிருப்பதுடன் சென்ற அரை நூற்றாண்டுகால இந்தியநாட்டின் அரசியல் வரலாறும் மிகத் தெளிவாய் விளக்கப்பட்டிருக்கிறது.

'திராவிடமணி பதிப்பக'த்தின் முதல் வெளியீடாய் இந்நூலை நாம் வெளியிடுவதில் பெருமிதம்கொள்ளுகிறோம். திராவிட மக்களும் அவர்கள் நல்லாசியை எங்கே அளிக்கட்டும்!

திராவிடமணி பதிப்பகம்,

தெப்பக்குளம், திருச்சி.

# ஐரோப்பிய தனியாட்சி நாடுகளுடன், திராவிடநாடு

## ஜனத்துகை-விஸ்தீரண விபரம்.

| நாடுகளின் பெயர். | | விஸ்தீரணம். | ஜனத்துகை. |
|---|---|---|---|
| பெல்ஜியம் | ... | 11,752 | 8,361,220 |
| பல்கேரியா | ... | 39,884 | 60,000,00 |
| டென்மார்க் | ... | 16,570 | 3,706,349 |
| இங்கிலாந்து | ... | 50,874 | 39,952,377 |
| பின்லாந்து | ... | 1,44,252 | 3,667,000 |
| ஜெர்மனி | ... | 1,85,998 | 66,300,491 |
| கிரீஸ் | ... | 49,022 | 6,204,684 |
| போலந்து | ... | 1,50,000 | 34,221,000 |
| போர்ச்சுகல் | .... | 35,490 | 15,000,000 |
| ருமேனியா | ... | 122,282 | 19,320,000 |
| சிவிட்சர்லாந்து | ... | 15,976 | 4,000,000 |
| சென்னைமாகாணம் அல்லது திராவிடநாடு | | 1,24,363 | 49,300,000 |


போலந்து


பின்லந்து


ஸ்விட்சர்லந்து


டென்மார்க்




திராவிடநாடு


ருமேனியா


இங்கிலாந்து


பெல்ஜியம்


ஜெர்மனி


கிரீஸ்


நேபாளம்


பல்கேரியா



# திராவிடஸ்தான்

விஷயங்களைப் பகுத்துணர்வது பெரும் வேலையாக இருக்கலாம்; ஆனால் அது அவசியமானதாகும். சட்ட ரீதியில் இந்தியாவுக்கு அரசியல் பொருளாதார முன்னேற்ற மளிக்க 60 ஆண்டுகளுக்கு முன்னர் தோற்று விக்கப்பட்ட காங்கிரஸ் 1907 வரை நன்கு வளர்ந்து வந்தது. 1907-ல் சூரத்தில் நடந்த வருடாந்திரக் கூட்டத்தில் தான் அது பெருத்த விபத்துக்குள்ளானது. டாக்டர் சர் ராஷ் பெஹாரிகோஷ் மாநாட்டுக்கு தலைமை தாங்கவிருந்தார். காங்கிரஸில் தீவிரக் கொள்கை படைத்திருந்தோரும், சட்ட ரீதியான கிளர்ச்சியில் நம்பிக்கையில்லாதோருமான திலகர் கட்சியினருக்கு டாக்டர் சர் கோஷ் தலைமை வகிப்பது பிடிக்கவில்லை. வரவேற்பு சொற்பொழிவு முடிந்து, தலைவர் பிரரேபிக்கப்படப் போகையில், மாநாட்டில் குழப்பம் மூண்டெழுந்து கலவரம் மேலிட்டது. ஒரு சில விநாடிகள் வரை நாற்காலிகளும் செருப்புகளும் பறந்தன; கூட்டம் கலைந்தது. மக்கள் உயிருக்குத் தப்பியோடினர். சூரத் விபத்தை நேரிலிருந்து பார்த்த காலஞ்சென்ற தோழர் வி. கிருஷ்ணசாமி அய்யரின் உற்சாகமே காங்கிரஸை மீண்டும் தலையெடுத்து நிலைக்க வைத்தது. அன்னாருடைய பெருமுயற்சியால், 1908 டிசெம்பரில் காங்கிரஸ் மீண்டும் சென்னையில் கூட ஏற்பாடாயிற்று; சூரத்தில் எதிர்ப்புக்குள்ளான டாக்டர் சர் ராஷ் பெஹாரி கோஷே தலைவராகப் போடப்பட்டார். மாநாட்டு அமைப்பாளர்கள் பயந்தே காரியஞ் செய்தனர்; மிக்க எச்சரிக்கையோடு

நடவடிக்கைகள் புரிந்தனர், தகுந்த நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்களிடத்தில்தான் பொறுப்பெதுவும் ஒப்படைக்கப்பட்டது. எல்லாம் சுமுகமாக முடிந்தது; காங்கிரஸ் மாநாடு வெற்றி கரமாக நிறைவேறியது. இப்படிப்பட்ட வெற்றிக்குக் காரணமாயிருந்தோர், இன்றும் உயிருடன் வாழ்ந்திருப்போர் எவரும் இப்பொழுது காங்கிரசிலில்லையென்பதைஇச்சந்தர்ப்பத்தில்குறிப்பிட ஆசைப்படுகிறேன். இதையெல்லாம் ஏன் சொல்கிறேனென்றால், சென்னை மாகாணத்தைச் சேர்ந்த பெரும் பகுதியினர் காங்கிரசிலில்லை. காங்கிரஸ் அவர்களுக்குப் பிரதிநிதிஸ்தாபன மில்லை என்பதைத் தெளிவு படுத்தவேயாகும்.

காங்கிரஸில் தீவிரக்கொள்கை படைத்தோரிருந்தனர்; "மகாத்மா" தென்னாப்பிரிக்காவிலிருந்து திரும்பி காங்கிரசில் நுழைந்ததும், அது வளர்ச்சி பெற்றது. 1920-ல் மாண்ட்போர்ட் சீர்திருத்தச் சட்டங்களின் கீழ் மத்திய மாகாண சட்டசபைகள் பெரும்பாலும் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களாலும் ஓரளவு நியமன உறுப்பினர்களாலும் விரிவாக்கப்பட்டதும், சட்ட சபைகளுக்குக் கட்டுப்படவேண்டிய பொறுப்பு மாகாண சர்க்கார்களுக்கு ஓரளவு வந்ததும், காங்கிரசின் பொறுப்பற்ற தன்மை அதிகரித்தது. 1920-க்கும், 1937-க்கு மிடையே என்ன நடந்ததென்பது உங்களுக்குத் தெரியும். சட்ட சபைகள் நீதிமன்றங்கள், பாடசாலைகள் பகிஷ்கரிக்கப்பட்டன. சிவில் ஒத்துழையாமை பல்வேறு உருவத்தில் தாண்டவமாடிற்று. அயல்நாட்டுத் துணிகளை எரித்தல் அயல்நாட்டுச் சாமான்கள் விற்கும் கடைகளையும், கள்ளுக்கடைகளையும், மறியல் செய்தல், வரிகொடாமை, கோஷங்களை யெழுப்பல், பொது வேலை நிறுத்தங்கள், தடையை எதிர்த்து ஊர்வலங்கள், அவதூறான கூட்டங்கள், தொழிலாளர் வேலை நிறுத்த முயற்சிகள் நாள்தோறும் கணக்கின்றி நடைபெற்று வந்தன. பம்பாய், கல்கத்தா பொதுப் பாதைகளில் நடந்து செல்லுதல்கூட அபாயமாகக் கருதப்பட்டது. சைமன்

பகிஷ்கரிப்பு, தண்டி யாத்திரை, உப்பு சத்தியாக்கிரகம் ஆகியவை காங்கிரசின் திருவிழாக்களாகும். சட்டத்தை மீறி, அவமரியாதை செய்தல் போற்றி ஆதரிக்கப்பட்டது. சட்டத்தை எதிர்த்து உடைப்பதும் சிறை செல்வதும் தேசாபிமானத்தின் சிறந்த அம்சங்களாகக் கருதப்பட்டன. சிறைக்கு எத்தனை தடவை சென்றார், எவ்வளவுகாலம் கழித்தார் என்பதைக்கொண்டே ஒரு நபரின் நாட்டுத் தொண்டு மதிப்பிடப்பட்டது.

இதுபோன்ற காரியங்களை யெல்லாம் முன்னின்று நடத்திய காங்கிரஸ் தலைவர்கள் 1937-ல் புதிய சர்க்கார் நிறுவி, சட்டம் ஒழுங்கை நிலைநிறுத்த விரும்பி, மீறுவோரைத் தண்டிக்க முற்பட்டபோது அவர்களது சக தோழர்கள், தொண்டர்கள், அவர்களுக்கு எப்படி கீழ்ப்படிவர்? தங்களுக்குப் போதிக்கப்பட்ட கலைகளில் தேர்ச்சி பெற்றுவிட்டோமென்பதை அவர்கள் காட்டிக்கொள்ள முற்படுவார்களென்பது இயற்கையே. சட்டத்தை மீறியோர் சட்டத்தை நிலைநிறுத்தல் முடியாது. திருடர்கள் போலீஸ்காரர்களாக முடியாது. ஒரு திருடன் இன்னொரு திருடனைப் பிடிப்பதென்பது ஒரு வரையரைக்குட்பட்டதே. எதிர்க் கோஷ்டியைச் சேர்ந்த திருடனொருவன் தான் இன்னொரு கோஷ்டித் திருடனைப் பிடிக்க முடியும். எனவே 1937—39-ல் காங்கிரஸ் ஆட்சிசெய்த 27 மாதகாலங்களில் இம்மாகாணத்தில் சுமார் 100 தொழிலாளர் வேலைநிறுத்தங்களும், மந்திரிகளை எதிர்த்து ஆர்ப்பாட்டங்களும் நடந்ததில் வியப்பில்லை! ஷை காங்கிரஸ் மந்திரிகள் காலத்தில் தவிர வேறெப்பொழுதும் தான்தோன்றியாட்சி தலைவிரித்தாடியதில்லை. கட்சிக் கூட்டங்களிலும் சரி, சட்டசபைகளிலும் சரி, சட்டசபை உறுப்பினர்களுக்கு பேச்சு சுதந்தரம் மறுக்கப்பட்டது. எதிர்க் கட்சியாரின் கண்டன உரைகளுக்கு செவி மடுக்க ஆள் கிடையாது. தான் ஆமோதிக்காத எவ்விஷயத்துக்கும் தனது செவிட்டுக் காதையே திருப்பப் போவதாக அன்றைய பிரதமர் சட்டசபையில்

ஓர் நாள் குறிப்பிட்டார். கட்டாய இந்திபோன்ற பைத்தியக்காரத் திட்டங்கள் வலியுறுத்தி நுழைக்கப்பட்டன. "நீதி நியாயமற்ற சட்டங்கள்—சட்ட புத்தகத்தில் அவை இடம்பெறுவதே வெட்கக்கேடு" எனக் காங்கிரசார் வெளியிலிருக்கையில் பெருவாரியாகக் கண்டித்த சட்டங்கள், பிரபல கிரிமினல் சட்டம் உள்பட அனைத்தும் தங்கு தடையின்றி பிரயோகிக்கப்பட்டன. ஆட்சியிலிருப்பது பொது மக்கள் சர்க்கார்; அன்னிய சர்க்கார் அல்ல என்ற சமாதானத்தின்பேரில் போலீஸ் ஆட்சிக்கும், செயலுக்கும் ஆதரவு நல்கப்பட்டது. பொதுமக்கள் சர்க்காரின் செல்வாக்கு எவ்வளவு பாழ்பட்டுப் போயிற்றென்பதற்கு ஒரு எடுத்துக்காட்டு. போர் மூண்ட காலத்தில் இந்தியாவிலிருந்த மந்திரி சபைகள் ராஜிநாமா செய்தபோது, திரு. ஜின்னாவின் விருப்பப்படி இம்மாகாணத்தில்மட்டும் சுமார் 400 (இடங்களில்) 'விடுதலை தினம்' கொண்டாடப்பட்டது. இக்கூட்டங்களில் ஆயிரக் கணக்கில் கலந்துகொண்ட மக்களுள் பெரும் பான்மையோர் இந்துக்களேயாவர்.

அட்வைசர்கள் ஆட்சிக் காலத்தில், ஓரளவு சமாதானம், ஒழுங்கு, சட்டம் நிலவியது. இப்பொழுதும் காங்கிரஸ் நிர்வாகம் நடக்கும் மாகாணங்களில் பழைய கதைதான். லீக் நிர்வகிக்கும் மாகாணங்களில் காங்கிரஸ் பழைய கூத்தையே ஆடுகிறது. முஸ்லிம்கள் எதிர்த்து நிற்கின்றனர். இவைகளுள் எதையும் நான் சரியென்று கூறவில்லை. நடப்பதென்ன வென்பதையே எடுத்துக் காட்டுகிறேன்.

இம்மாகாண மக்கள், காங்கிரஸ் சர்க்கார் ஆட்சியை இருமுறை கண்டனர். ஒன்று 1937-ல். இன்னொன்று கடந்த ஓராண்டுகாலமாக. மக்களின் நிலைமை முன்பிருந்ததைக் காட்டிலும் எந்த விதத்திலாவது உயர்ந்திருக்கிறதா வென்று எவரும் யோக்கியப் பொறுப்போடு எடுத்துச் சொல்ல முடியுமா? சர்க்காருக்கு நிர்

வாகத் திறமை யில்லாததாலேயே நாட்டில் உணவுப் பஞ்சமும், துணிப்பஞ்சமும், மேலிட்டுநிற்கின் றனவென்றும், லஞ்சம் தலைவிரித்தாடுகிறதென்றும் அட் வைசர் ஆட்சிக்காலத்தில் காங்கிரஸார் நாடெங்கும் பறை சாற்றினர். மக்கள் சர்க்கார் ஆட்சி செலுத்தும் கடந்த ஓராண்டு காலமாக மாகாணத்தின் நிலைமை என்ன? அரிசி ரேஷன் தொடர்ந்து குறைக்கப்பட்டு வருகிறது. துணிப் பஞ்சம் மேலிட்டு விட்டது. ஆண்டுக்கு ஐந்து கெஜம்- அதுவும் கிடைப்பது அரிதாகவுள்ளது. மக்களிடையே திட் டங்களைப் பிரயோகித்து நாளுக்கு நாள் தொல்லையை அதிகப்படுத்தி வருகின்றனர் காங்கிரசார்.

அதிகார ஆசையால் போட்டி மனப்பான்மை ஏற் பட்டு ஒவ்வொருவரும் தங்கள் தங்களின் உண்மையுருவை நிரூபித்துக் கொண்டனர். காங்கிரஸ் தலைவர், ஆச்சாரியா கிருபாளனி அண்மையில் சென்னையில் தங்கியிருந்தபோது சென்னை காங்கிரஸின் இழி நிலையை விளக்கமாகக் கூறி விட்டார். பட்டாபி சீத்தாராமய்யா போன்ற பிரமுகர் களும் கேவலமாகக் குறிப்பிட்டுள்ளனர். சட்டசபை உறுப் னர்களே, சட்ட சபையிலேயே வெளிப்படையாக மந்திரி சபை மீது குற்றஞ் சாட்டியதை—லஞ்ச ஊழல் மலிந்து விட்டதெனயெடுத்துக்காட்டியதை, விசாரணை வேண்டி நின் றதை நாமறிவோம். விசாரணைக்கு முன் வரவில்லை மந்திரி சபை. மேலும் எடுத்துக் காட்ட நான் பிரியப்படவில்லை. 1947 மே 21-ம் தேதியன்று பாட்னாவில் "மகாத்மா" தனது வழிபாட்டுக் கூட்டத்தில் ஆற்றிய சொற்பொழிவின் ஒருபகுதியை மட்டும் இங்கு குறிப்பிடுகிறேன்:

"காங்கிரஸ் பதவியேற்ற நாள்முதற்கொண்டு, அது கடந்த 60 ஆண்டுகாலமாக அரிது முயன்று ஈட்டிய பெருமை, தியாக உணர்ச்சி, பொதுநலத் தொண்டு ஆகிய வற்றை இழந்துவருகிறதாகப் பல வட்டாரங்களிலிருந்து தகவல் கிட்டிவருகிறதென கூறப் படுகிறேன்

தன்னலமிக்க அதிகார ஆசைகொண்ட பதவிவேட்டைக் காரரின் ஸ்தாபனமாக அதிவேகத்தில் மாறிவருகிறது காங்கிரஸ். பொது மக்களின் ஊழியர்களாக இருப்பதற்குப் பதிலாக, காங்கிரசார் அவர்களின் தலைவர்களாக, எஜமானர்களாக மாறிவிட்டனர். சில்லரை சூழ்ச்சி வேலைகளாலும், கோஷ்டிப் பிரிவுகளாலும் காங்கிரஸ் சின்னபின்னம் ஆக்கிவிடப்பட்டிருக்கிறது. இது எல்லா மாகாணத்துக்குமே பொருந்தும். இவை தொடர்ந்து நிலைபெறுமேயானல் விரைவில வந்துகொண்டிருக்கும் விலை மதிப்பில்லா சுதந்திரத்தைப் பாதுகாத்துக்கொள்ள இந்தியரால் இயலாது. அறிவுத்திண்மையும், உள்ளத் தூய்மையும் அதற்குப் பெரிதும் வேண்டும்.

காங்கிரசும் லீக்கும் இத்தன்மைகளை பெரு விட்டால், எல்லா அதிகாரங்களும் அவர்கள் கையை விட்டு நழுவிப் போவதை உணரநேரிடும். பிரிட்டிஷாரைப்போல் துப்பாக்கி முனையின் உதவியால் அதிகாரத்தைக் காப்பாற்ற முடியாது. இந்த ஸ்தாபனங்கள் பெற்றுள்ள அதிகாரமெல்லாம் மக்களிடமிருந்து பெறப்பட்டது. இப்பொழுது, ஒரு சமயம் இவ்வுண்மையை மக்கள் அறிந்து கொள்ளும் திறமையைப் பெருமலிருக்கலாம். காங்கிரஸ் பல வாண்டுகளின் ஊழியத்தின் பயனுகவும் தியாகத்தின் பலனுகவும், மக்களின் நம்பிக்கையைப் பெற்றிருக்கிறது. இப்போழுது அது, மக்களைக் காட்டிக் கொடுத்து விட்டால், ஆட்சி அதிகாரம் குண்டர்கள் கையில் இறுதியாய்ப் போய்ச்சேரும் என்று அஞ்சுகிறேன்."

திரு. காந்தியாரின் மேலேயுள்ள கருத்துக்களை எவராலும் மறுக்க முடியாது. அவரது வாக்கியத்தின் இறுதி கட்டம் நம் நாட்டிலே நடக்கக் கூடாது என்பது என் அவா. அதனல்தான் நான் சுதந்திர திராவிடஸ்தான் கோருகிறேன். போரில் வெற்றியடைந்தபிறகும், காங்கிரசிடம் சமரசம் செய்து கொள்ள-ஒரு ஒப்பந்தத்துக்கு வர பிரிட்டிஷ்

சர்க்கார் எவ்வளவோ முயன்று பார்த்தார்கள், ஆனல் அதில் எவ்வாறு தோல்வியுற்ருர்கள் என்பதை நான் எடுத்துக் காட்ட வேண்டியதில்லை. அதுபோலவே, பிரிட்டிஷ் மந்திரி தூது கோஷ்டி இந்தியாவுக்கு வந்ததையும் அவர்கள் முயற்சி தோல்வியுற்றதையும் நான் விளக்க வேண்டியதில்லை. சமரசத்துக்கான எல்லா முயற்சிகளும் தோல்வியுற்றுப் போகவே, 1946-ம் வருஷத்திய பிரபல அறிக்கைவெளிவந்தது. அவ்வறிக்கையின் விளைவு தான் அரசியலமைப்பு சபையின் இன்றைய தோற்றம்.

அரசியலமைப்பு சபை எப்பொழுது ஒரு நாட்டில் கூட்டப்படும் என்பது யோசிக்கத்தக்கதாகும். ஒன்று, வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தின் வடக்கேயுள்ள ஆப்ரிடியார் அல்லது எல்லைப்புற மலைவாசிகளைப்போன்றவர்கள் தங்களுக்கென ஒரு ஒழுங்கான சர்க்கார் தேவை என்று எண்ணும்போதோ அல்லது, ஒரு நாட்டு மக்கள் இருக்கிற சர்க்காரை அடியோடு மாற்றி புதிய சர்க்கார் ஒன்றை மாற்றியமைக்க விரும்பும்போதோ தான் இத்தகைய அரசியலமைப்பு சபை கூட்டப்படும். இத்தகைய அரசியலமைப்பு சபையானது, வயதுவந்த மக்களனைவராலும் தெரிந்தெடுக்கப்படும்பிரதிநிதிகளாலேயே கூட்டப்படவேண்டும். அதுவும் மேலே எடுத்துக்காட்டிய காரணங்களாலும் முறைப்படியும் கூட்டப்பட்டால்தான் அது ஆதிபத்திய ஸ்தாபனமாக விளங்க முடியும். 1934-ம் வருடம் நடந்த காங்கிரஸ் மாநாட்டில், வயதுவந்தவர்களால், அல்லது ஏறக்குறைய அதற்குச் சமமானவர்களால் தெரிந்தெடுக்கப்படும் அரசியலமைப்புச் சபையினல்தான் அரசியலமைப்பு நிர்ணயிக்கப்படவேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. அதிகப்படியான வாக்காளர்களால் தெரிந்தெடுக்கப்படவேண்டும் என நேரு அவர்களும் கூறியுள்ளார். பின்னர் காங்கிரஸ் காரியக் கமிட்டியிலும் இதுபோலவே ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டு அந்த மாநாடுகளில் வற்புறுத்தப்பட்

டிருக்கிறது. மே 16-உ அறிக்கையிலும் இவ்வடிப்படை யான கொள்கை ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது.

இந்தியாவிலுள்ள சட்டசபைகளுக்கும், தெரிந்தெடுக் கப்பட்டுள்ள இதர ஸ்தாபனங்களுக்கும் பிரதிகளைத் தெரிந் தெடுத்து அனுப்புகிறவர்கள் மொத்த ஜனத்தொகையில் 100க்கு 10 அல்லது 14 பேர்களே அல்லது வயது வந்தவர் களில் 25 சதவிகிதத்தினரே இருப்பர். இந்தஅடிப்படையின் மீதும் அரசியலமைப்பு சபைக்கான தேர்தல் நடக்கவுமில்லை. இவ்வடிப்படையின்மீது தேர்தல் நடப்பதாயின் 3 அல்லது 4 மாதங்கள் ஆகும். இவ்வளவு காலம் பொருத்திருக்க மனமில்லாமல் பிரிட்டிஷ் சர்க்காரும் துடிக்கிறது, காங்கிர சும் துடிக்கிறது. எனவே குறுக்குவழி கண்டு பிடித்தனர். சட்டசபைகளிலிருந்து பிரதிநிதிகளைத் தெரிந்தெடுக்கும் முறையைக் கைக்கொண்டார்கள். 30 கோடி பிரிட்டிஷ் இந்திய மக்களின் அரசியலை வகுக்க 292 பிரதிநிதிகளை 1585 பேர்கள் தெரிந்தெடுக்கும் இம்முறைதான் விரிவான முறை. அரசியலமைப்புச் சபைக்குத் தெரிந்தெடுக்கும் வாய்ப்பு கிடைத்திருப்பதாக, பம்பாயில் 1946 ஜுலை 9-உ நடைபெற்ற அ. இ. கா. கமிட்டிக் கூட்டத்தில் காங்கிரஸ் ஜனநாயக சர்வாதிகாரி சர்தார் பட்டேல், பறைசாற்றினர். இதிலிருந்து, பெரிய காங்கிரஸ் தலைவர்களில் ஒருவரின் ஜனநாயக் கொள்கை எந்த அளவிலிருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ளலாம். அதேகூட்டத்தில் பண்டித நேரு பேசுகையில் "உண்மையிலேயே நாம்விரும்பியது கிடைக்க வில்லை. பல இடையூறுகள் உண்டு. நீண்ட நாட்களுக்கு இது இயக்க முடியாது. இடையில் முறிந்து போகலாம்" என்று குறிபபிட்டுள்ளார். மகாத்மா இதுபற்றி குறிப் பிடுகையில், "இது சுதந்திரசபையல்ல என்பது எனக்குத் தெரியும். இத்திட்டத்தில் பலகுறைகளிருக்கின்றன. ஆனல் அதைத் திருத்துவதும், புதைப்பதும் உங்கள் சக்தியைப் பொறுத்திருக்கிறது" என்று பேசியுள்ளார். இவ்வளவு இலட்சணத்தோடு கூடிய சபையைத்தான்

பண்டித நேருவும் அவரைப் பின்பற்றுகிற இதாரும், இது முழு ஆதிபத்திய அதிகாரமுடைய சபை என்றும், இச் சபையினுல் வகுக்கப் டும் அரசியலமைப்பு பார்லிமெண்டின் அங்கீகாரத்திற்கு அனுப்பப்படமாட்டாது என்கிற அளவுக்கும் துணிந்துகூறவும் முன்வந்துவிட்டார்கள் இக் கூற்றை யாரால் ஒப்புக்கொள்ளள முடியும்? முஸ்லிம் லீக்கினர் இச்சபையில் துவக்கத்திலிருந்தேகலந்துகொள்ள மறுத்துவிட்டனர். இதனுல், பிரிட்டிஷ் சர்க்காரும்; இத் திட்டத்தை வகுத்தவர்களும் பெரிதும் ஏமாற்றமடைந்திருக்கலாமேயொழிய தன்னறிவுடைய எவரும் இதைக் கண்டு ஆச்சரியமடைந்திருக்க முடியாது.

சீக்கியர்கள் இத்திட்டத்தை நிராகரித்தார்கள்; நேரடி நடவடிக்கை எடுக்கப்போவதாகவும் தீர்மானித்தார்கள். 1946 ஆகஸ்டு 9உ கூடிய காங்கிரஸ் காரியக்கமிட்டிக் கூட்டத்தில், சீக்கியர்கள் செய்த முடிவை புனராலோசனை செய்யுமாறு கேட்டுக்கொள்வதாக தீர்மானிக்கப்பட்டதுடன், அத்தீர்மானத்தை வாபீஸ் வாங்குமாறும் நயந்து கேட்டுக்கொள்ளப்பட்டனர்.

பிறகு, அரசியல் நிர்ணய சபைக்கு இருபிரிவுகளாக அதாவது முஸ்லிம், முஸ்லிமல்லாதார் என்ற பிரிவுகளாக தேர்தல் நடந்தது. ஐரோப்பியர் ஷை தேர்தலில் கலந்து கொள்ளக் கூடாது. என்று காங்கிரஸார் தடுத்துவிட்டனர். வாக்காளர்களில் ஒரு குறிப்பிட்டவர்களை தேர்தலில் கலந்துகொள்ளக்கூடாது என்று தடைப்படுத்தியது சட்டத்தின்பாற்பட்டதல்ல. எந்தத் தேர்தலதிகாரியாலும் இது ஒப்புக்கொள்ளப்பட முடியாத ஒரு காரியம். எனவே, இவ்வரசியலமைப்புச் சபையே சட்டப்படி செல்லத்தக்கதுமல்ல, அது வகுக்கும் எந்த அரசியலமைப்பும் அதை ஏற்றுக்கொள்ள மறுக்கும் எவர்மீதும் சட்டப்படி கட்டுப்படுத்தக்கூடியதுமன்று.

அடுத்தாற்போல், தேர்தல் நடந்த முறையைக் கவனிப்போம், முஸ்லிமல்லாத தொகுதிக்கு ஒவ்வொரு மாகாணத்துக்கும் யார்யாரை நிறுத்துவது என்பதை நிர்ணயம் செய்ததே காங்கிரஸ் மேலிடம்தான். அவர்களைத் தான் சட்டசபை அங்கத்தினர்கள் பொறுக்கி எடுத்ததாக அறிவிக்கவேண்டும். அதிலும் ஒவவொருவரை இவ்வளவு உறுப்பினர் ஆதரிக்கவேண்டும் என 'கோட்டா' பிரித்து விடப்பட்டிருந்தது. இதை மீறுகிறவர்கள்மீது ஒழுங்கு நடவடிக்கை 'பூச்சாண்டி' காட்டப்பட்டு வந்தது. இவ்வளவு கட்டுப்பாட்டுக்குட்பட்டு நடந்தது இத் தேர்தல். ஆகவே, இவ்வரசியலமைப்பு சபைக்கு நடந்தத் தேர்தல் காங்கிரசின் விருப்பப்படி, காங்கிரசால் நடத்தப்பட்டதாகும். ஒரு குறிப்பிட்ட வாக்காளர்களுக்கும் சுதந்திரமில்லை. இத்தகைய தேர்தலை சுதந்திரத்தேர்தல் என்று எவ்வாறு கொள்வது? இச்சபை ஆகஸ்ட் 'தியாகிகளின் சபை. இதற்கு ஆதிபத்திய உரிமையும் அதிகாரமும் கோரப்படுகிறது. ஒவ்வொரு இந்தியனும் இதற்கு தலைவணங்க வேண்டும். இச்சபை வகுக்கும் திட்டங்கள் இப்பரந்த நாட்டிலுள்ள எல்லோரையும் கட்டுப்படுத்துமாம்!

இச்சமயத்தில் பிறநாடுகளின் அரசியலமைப்பு சபைகளைக் குறித்து சிறிது விளங்கிக்கொள்வதுநலம். எடுத்துக்காட்டாக, அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்பையும் அயர்லாந்து அரசியலமைப்பையும் எடுத்துக்கொள்வோம்.

## அமெரிக்கா

அமெரிக்காவில் 18-ம் நூற்றாண்டின் மத்தியில் பதிமூன்று 'காலனிகள்' இருந்தன. அவை ஒவ்வொன்றும் பிரிட்டனுக்கு உட்பட்டிருந்து வந்தன. பொதுவான சில விவகாரங்கள் அதாவதுவெளிநாட்டுப்படையெடுப்பிலிருந்து நாட்டைப் பாதுகாப்பது, வர்த்தகம் நடத்துவது, கடன் வாங்குவது, முதலிய காரியங்களை கவனிக்க உறுதியற்ற

ஒரு சமஷ்டி இருந்துவந்தது. அமெரிக்க சுதந்திரம் போர் நடந்த காலேயில், சமஷ்டி அரசியல் நிறுவமுயலப்பட்டது. அது பூரணமானதாயில்லாவிட்டாலும் திருத்தக்கூடிய தாகவேயிருந்தது. அச்சமஷ்டியில் சேர்ந்த ஒவ்வொரு நாடும், சிலகுறிப்பிட்ட காரியங்களைத்தவிர ஏனைய காரியங் களில் முழுச்சுதந்திரத்துடனும் ஆதிபத்திய உரிமையுட னும் இருக்க அனுமதிக்கப்பட்டது.

யுத்தத்தின் முடிவாக பிரிட்டிஷ் ஆதிபத்தியம் ஒழிந்து போகவே, அரசியலமைப்பு சபை கூட்டப்பட்டது. ஒவ் வொரு நாட்டின் பிரதிநிதிகளும் கலந்துகொண்டார்கள். இச்சபைதான் அரசியலை வகுத்தது. இச்சபை அரசியலை வகுக்கும்போது, தனக்கில்லாத அதிகாரத்தையும் அது உபயோகித்தது என்று கூறப்பட்டபோது, இச்சபையின் நடவடிக்கைகள் தீர்மானங்களே.—சிபார்சுகளே யொழிய விதியல்ல; இது யாருக்காக வகுக்கப்பட்டதோ அவர்க ளால் ஒப்புக்கொள்ளப்பட்டு அங்கீகாரமளிக்காவிட்டால் அவர்களை இது கட்டுப்படுத்தாது என்று அறிவிக்கப்பட் டது. சுதந்திர யுத்தத்திற்குப்பின், சுதந்திரப் பிரகடனம் வெளியாயிற்று. அதன்படி இருக்கிற சர்க்காரை திருத் தவோ, அல்லது அடியுடன் மாற்றியமைக்கவோ மக்களுக்கு உரிமையளிக்கப்பட்டது. இவ்வாறு அமைக்கப்படும் அரசியலமைப்பும் ஒவ்வொரு நாட்டுப் பிரதிநிதிகளாலும் ஒப்புக்கொள்ளப்படவேண்டும். இப்பிரதிநிதிகள் அந்த நாடுகளால் அதற்கென தெரிந்தெடுக்கப்பட்டு அனுப்பப் பட்டவர்கள். அந்த நாடுகளில் ஏதாவது ஒன்று மறுத் தாலும் தனித்திருக்க உரிமையிருந்தது. அதை சமஷ்டி சர்க்கார் கட்டுப்படுத்த முடியாது.

ஆக, அமெரிக்க அரசியலமைப்பிலிருந்து ஒவ்வொரு நாட்டின் தெரிந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளால் வகுக்கப் பட்ட அரசியலமைப்பை, அந்தநாட்டுப் பிரதிநிதிகளால் ஒப்புக்கொள்ளப்பட்டால்தான், அது அந்நாட்டை கட் டுப்படுத்தும் என்பது விளங்கும். அதுமட்டுமல்ல, அவ்

வளவு முறைப்படி தெரிந்தெடுக்கப்பட்ட அரசியலமைப்பு சபையே, ஆதிபத்திய உரிமையுடையதல்ல வென்று கூறப்பட்டிருக்கையில், இப்பொழுது டில்லியில் கூடியுள்ள இந்தக்கூட்டத்தை ஆதிபத்திய உரிமையுடையது என்று கூறப்படுவது எவ்வளவு அக்கிரமமான காரியம் என்பது விளங்காமல் போகாது.

## அயர்லாந்து

இனி அடுத்தபடியாக அயர்லாந்து தேச வரலாற்றை எடுத்துக்கொள்வோம். 1920-ம் வருடம் அயர்லாந்து, வட அயர்லாந்து தென் அயர்லாந்து என பிரிக்கப்பட்டது. இவ்விருபகுதிகளுக்கும் தனித்தனி பார்லிமெண்டுகள் ஏற்படுத்தப்பட்டன. அவைகளுக்கு வரையறைக்குட்பட்ட அதிகாரங்கள் பல வழங்கப்பட்டிருந்தன. இதை எதிர்த்து தென் அயர்லாந்து கிளர்ச்சி செய்தது. கனடாவும் மற்ற டொமீனியன்களும் பெற்றுள்ள அந்தஸ்தைப் போன்ற அந்தஸ்தை தனக்கும் அளிக்கவேண்டும் என்று கேட்டது. இதன் விளைவாக 1921-ம் வருடம் டிசம்பர் 6உ இங்கிலாந்து பிரதிகளுக்கும் அயர்லாந்து பிரதிநிதிகளுக்குமிடையே ஒரு ஒப்பந்தம் ஏற்பட்டது. 1920 ஆம் வருட சட்டப்படி, அயர்லாந்து பார்லிமெண்ட் சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள உறப்பினர்கள் தான் அரசியல் நிர்ணய சபையின் அங்கத்தினர்களாயுமிருக்க வேண்டும், அச்சபை தான் அயர்லாந்தின் அரசியலையும் வகுக்க வேண்டும், என்பது அவ்வொப்பந்தத்தின் ஒரு ஷரத்து. இவ்வொப்பந்தம், பின்னர் பிரிட்டிஷ் பார்லிமெண்டால் அங்கீகரிக்கப்பட்டு சட்டமாக்கப்பட்டது. ஆகவே, அயர்லாந்து பார்லிமெண்டு இதன் பயனாய் அரசியல் நிர்ணய சபையாக உடனே மாற்றப்பட்டது. பிறகு அது வகுத்த அரசியலமைப்பை பிரிட்டிஷ் பார்லிமெண்டும் அங்கீகரித்தது. இதிலிருந்து, சட்டப்படி உருவகமாகும் அரசியலமைப்பு சபை வகுக்கும் அரசியல், மீண்டும் பிரிட்டிஷ் பார்லிமெண்டால் அங்கீகாரம் செய்து சட்டமாக்கப்பட

வேண்டும் என்பது விளங்கும். 1946 ஆம் வருடம் மே மாதம் 16-ந் தேதி மந்திரி கோஷ்டியும் வைசிராயும் வெளியிட்ட அறிக்கையின் திட்டப்படி, மாகாண சட்டசபைகளின் முஸ்லிம் பிரதிநிதிகளும் முஸ்லிம்மல்லாத பிரதிநிதிகளும் தனித்தனி அந்தந்த மாகாணத்திற்கு உள்ள விகிதாச்சாரப்படி பிரதிநிதிகளை அரசியல் நிர்ணய சபைக்குத் தேர்ந்தெடுக்கப்படவேண்டும். இவ்வாறு தெரிந்தெடுக்கப்படும் 11 மாகாணங்களின் பிரதிநிதிகளைக் கொண்ட சபை தான் இந்தியாவின் அரசியல் நிர்ணய சபை என்பது.

ஆனால் இத்தகைய அரசியல் நிர்ணய சபையை நிறுவ மந்திரி தூது கோஷ்டிக்கோ வைசிராய்க்கோ அதிகாரமேது? அவர்களுக்கு இதனைச்செய்ய அதிகாரமில்லை இத்திட்டம் தகுதியானது என்று பிரிட்டன் கருதியிருந்தால், அயர்லாந்து விஷயத்தில் நடந்துகொண்டது போல், இந்தியா விஷயத்திலும் ஒரு ஒப்பந்தம் செய்யப்பட்டு பார்லிமெண்டிலும் உடனே ஒரு மசோதா கொண்டுவந்து சட்டமாக்கியிருக்கலாம். ஆனால், காங்கரஸ் தலைவர்களும் லீக் தலைவர்களும் மறுக்காமல் இத்திட்டத்தை ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். என்று பிரிட்டன் இப்போது சமாதானம் கூறலாம். 1945, மே 16-ந் தேதி திட்டம், 1947, ஜூன் 2-ந் தேதி திட்டத்தால் மாற்றப்பட்டுள்ளது. இதனை காங்கரசம் முஸ்லிம் லீக்கும் ஒப்புக்கொண்டுள்ளதா என்பதை ஆராய்வது வீண் வேலையேயாகும். அப்படியே, அவர்கள் இருவரும் ஒப்புக்கொண்டதாகவே வைத்துக் கொள்வோம், இந்த ஸ்தாபனங்கள் இந்தியாவிலுள்ள எல்லா மக்களின் பிரதிநிதித்துவம் வாய்ந்ததா? சென்ற மகாயுத்தத்தின்போது, காங்கரஸ் யுத்த எதிர்ப்புப் பிரச்சாரம் செய்தும் எதிர்ப்பு நடவடிக்கை எடுத்தும், லீக் நடுநிலைமை வகித்து வந்தும், இந்தியா ஏராளமான தளவாடங்களையும், ஆட்களையும் பணத்தையும் பிரிட்டனுக்கு கொடுத்து உதவியிருக்கிறது என்பதை பிரிட்டிஷ் சர்க்கார்

நன்கு அறிந்திருக்கிறார்கள். அவ்வாறு செய்யாதிருந்தால், யுத்தத்தின் முடிவு வேறு விதமாகவே இருந்திருக்கும். இதிலிருந்து காங்கரசிலும், முஸ்லீம்லீக்கிலுமசேராத அவைகளின் செல்வாக்குக்குட்படாத பெரும்பாலான மக்கள் இருக்கிறார்கள் என்பதையும் அவர்கள் தெரிந்துகொள்ளாமலிருக்கமுடியாது. இவ்வளவு பெரும்பான்மையான மக்களும், யுத்தம் முடிந்ததும் செயலற்று நடைப்பிணங்களாகிவிட்டார்கள் என்று பிரிட்டிஷ் சர்க்கார் கருதியிருக்கிறார்களா என்று கேட்கிறேன். அவர்களது நன்றி கெட்ட செயல் ஒருபுறமிருக்க, பிரிட்டிஷ் இந்திய மக்கள் எல்லோருக்கும் காங்கரசும் முஸ்லிம் லீக்கும் முழு பிரதிநிதித்துவம் வகிக்கிறது என்பதையாவது பிரிட்டிஷ் சர்க்கார் கண்ணியமாக ஒப்புக்கொள்கிறார்களா என்று கேட்கிறேன். மேலும், இவ்வரசியலமைப்பு சபை வகுக்கும் திட்டம் 93 பிரதிநிதிகள், அதாவது மொத்தப் பிரதிநிதிகளில், 25 சதவிகித மக்களைக்கொண்ட சமஸ்தானங்களையும் கட்டுப்படுத்துமாம். சமஸ்தான பிரதிநிதிகள் இத்திட்டத்தை ஒப்புக்கொண்டிருக்கிறார்களா? அது நிற்க, இவ்வரசியலமைப்பு சபைக்குத் தேர்தல் நடந்தபோது, அதன் நடவடிக்கைகளில் முஸ்லிம் பிரதிநிதிகளும் முஸ்லிமல்லாத பிரதிநிதிகளும் கலந்து கொள்வார்கள் என்றும், இவ்விரு பிரிவினர்களில் எந்தப் பிரிவினராவது கலந்துகொள்ளவில்லையானல், அவ்வாறு கலந்து கொள்ளாத நிலையில், அவ்வரசியலமைப்பு சபை செய்யும் முடிவுகள் முழு சக்திவாய்ந்ததாக இருக்கமுடியாதென்றும், அப்படியே மீறி அமலுக்குக்கொண்டுவரப்படுமேயானல், அதை எதிர்க்கலாமென்றும் நம்பப்பட்டது. இரு சட்டசபைகள் உள்ள இடங்களில் ஒரு மசோதா இரு சபைகளாலும் ஒப்புக்கொள்ளப்படவேண்டும். இவ்விரு சபைகளில் ஏதேனும் ஒன்று ஒரு மசோதாவை நிராகரித்துவிட்டாலும், அது குறித்து ஆலோசிக்க மறுத்துவிட்டாலும், அம்மசோதா சட்டமாக வரமுடியாது. அதுபோலவே, இருசபைகளும் சேர்ந்த கூட்டுச்சபையின் ஆலோசனைக்கு ஒருமசோதாவை

கவர்னர் ஜெனரல் அனுப்புவாரேயானால், இக்கூட்டுச் சபையில் ஏதேனும் ஒன்று கலந்துகொள்ள மறுக்குமேயானல், ஒரு சபையில் நிறைவேறிவிட்டதினாலேயே அம் மசோதா சட்டமாக முடியாது. இவ்வரசியல கூட்டு சபையில் கலந்துகொள்ள முஸ்லிம் பகுதியினர் மறுத்து விட்டார்கள். அதன் விளைவு மேலே எடுத்துக்காட்டியது போன்று தானே இருக்க முடியும்? இருக்கவேண்டும். ஏன்? பிரிட்டிஷ் ராஜ தந்திரிகளும், காங்கரஸ் தலைவர்களும் இதேபோல் சொல்லி வந்திருக்கிறார்கள். அவ்வாறு இருந்தும், அருமையான நேரத்தையும், பணத்தையும் ஏன் வீணாக்கப்படுகிறது என்பது தான் நமக்கு விளங்கவில்லை. இதையெல்லாம் கருத்தில் கொண்டுதான் மகாகனம் டாக்டர் எம். ஆர். ஜெயகர் அவர்கள் அரசியல் நிர்ணய சபையிலிருந்து ராஜிநாமா செய்துள்ளார் போலும்! எந்த எண்ணம் அல்லது நியாயத்தின் மீது, இவ்வரசியலமைப்பு சபை செய்யும் காரியங்கள் எல்லோரையும் கட்டுப்படுத்தும் என்று கூறப்படுகிறது என்றும் இனியே தெரியநேரும்.

பிரிட்டிஷ்சர்க்காரின் 1947 ஜூன் மாதம் 2-ம் தேதி அறிக்கைக்குப் பிறகு, அரசியலமைப்பு சபை, தற்காப்பு, வெளிநாட்டு விவகாரம், போக்குவரத்து, தேவையான நிதி திரட்டுதல் போன்ற அதிகாரங்களைக் கொண்ட மத்திய சர்க்காருடன் கூடிய ஐக்கிய இந்தியா என்பவைகளின் அடிப்படைத்திட்டமே மறைந்து விட்டது இனிமேல் குறைந்தது இருதனித்தனி சர்க்கார்கள் தான் இருக்கும். சமஸ்தானங்கள் தங்கள் தங்கள் விருப்பம் போல் நடந்து கொள்ள அனுமதிக்கப்பட்டிருக்கிறது. ஆக, இவ்வாறு திட்ட முழுவதுமே மாற்றப்பட்டிருக்கையில், இவ்வரசியலமைப்பு சபையின் நடவடிக்கைகள், முடிவுகள் எவரையும் கட்டுப்படுத்தும் என்று எவ்வாறு சொல்லமுடியும்? எனவே, இவ்வரசியலமைப்புச் சபையின் முடிவுகளை இந்தியாமீது பலவந்தமாக திணிக்கப்படுகிறது. இது கூடாது—முடியாது என்பது என்கருத்து.

## ஏன் கேட்கிறோம்?

சென்னை மொழிவாரியாக நான்குபிரிவுகளாகப் பிரிக்கப்படவேண்டு மென்ற கோரிக்கை பயனற்றுப்போய் விட்டது. அது கவனிக்கப்படவில்லை. வடஇந்தியாவில் நடைபெறும் ஆர்பாட்டங்களைப் போல் கிளர்ச்சிகளைப் போல் இங்கு இல்லாததால் கவனிக்கப்படவில்லையா?

வைசிராய் சென்ற ஜூன் 4-ம் தேதி நடத்திய பத்திரிகையாளர் கூட்டத்தில், மந்திரி தூது கோஷ்டியின் திட்டம் யார்மீதும் பலவந்தமாக புகுத்தக்கூடியதல்ல வென்றும், பரஸ்பரநல்லெண்ணமும் ஒத்துழைப்பும் இதற்குத் தேவையென்றும் திட்டமாக தெளிவுபடுத்தியிருக்கிறார். எனவே தான் நாம் வேண்டிக்கொள்கிறோம், சென்னை இத் திட்டத்தை ஏற்றுகொள்ளவில்லை. ஏற்றுக்கொள்ளாத சென்னை மாகாணத்தின்மீது பலவந்தமாக புகுத்தவேண்டா மென்று அதுமட்டுமல்ல, தான் விரும்புவதுபோல் நடந்து கொள்ளவும் முடிவு செய்து கொள்ளவும் சென்னை மக்களுக்கு சுதந்திரமளிக்கப்படவேண்டும்

ஏன் திராவிடர்கள் சுதந்திர சர்க்கார் நிறுவவேண்டும்? ஏன் அவர்களுக்கு தனி அரசியல் நிர்ணயசபை வேண்டும்? எனகேட்கலாம். அதற்கு பதிலளிக்கவேண்டியதும் அவசியமே. கடந்த மூன்றரை நூற்றாண்டு காலமாக இந்தியாவின் செல்வம் அன்னியர்களால் சுரண்டப்பட்டு வருகிறது என்று சொல்லப்படுகிறது. இது உண்மை. ஆனால், துரதிஷ்டம்வாய்ந்த இச்சென்னை மாகாணத்தின் செல்வம்கடந்த 50 அல்லது 60 ஆண்டுகளுக்கு மேலாக பிரிட்டிஷாரால் மட்டுமில்லாமல் வட இந்தியராலும் சுரண்டப்படுகிறது. சென்னையிலும், இம்மாகாணத்தின் முக்கிய நகரங்களிலும் வடஇந்திய பாங்குகளின் கிளை ஸ்தாபனங்கள் எவ்வளவு இருக்கின்றன? இணைக்கப்பட்ட இப்பாங்குகளைத் தவிர, எவ்வளவு தனிப்பட்ட பாங்கர்களும், லேவாதேவிக்காரர்களும் இம்மாகாணத்தில் படை

யெடுத்திருக்கிறார்கள்? லட்சக்கணக்கில் கொள்ளை கொண்டு போகிறார்கள்? இவர்கள் நகரங்களோடு நின்று விடவில்லை; கிராமங்களிலும், குக்கிராமங்களிலும் புகுந்து சுரண்டுகிறார்கள். ஏழை குடியானவர்கள் பெட்டிக்கடைக்காரர்கள் ஆகியவர்களின் இரத்தத்தை உறிஞ்சி வருகிறார்கள். ஒரு காலத்தில் செட்டியார்களுக்கும் நாயுடுகளுக்கும், முதலியார்களுக்கும், பிள்ளைமார்களுக்கும் சொந்தமாயிருந்து வந்த சென்னைபவளக்காரத்தெருவும் கோவிந்தப்பநாயக்கன் தெருவும் இன்று வடநாட்டு வர்த்தகர்களுக்கு கேந்திரமாய்விளங்குகின்றன. வாணிபத்துறையில் எந்தவாணிபம் வடஇந்திய தேசீயத்தலைவர்களின் திருப்பார்வையிலிருந்து இங்கே தப்பியிருக்கின்றது? எது அவர்களுக்கு பெரிய காரியமாகத் தோன்றுகிறது? எது அற்பமாகத் தோன்றுகிறது! எந்தத்தொழிலை விட்டு வைத்திருக்கிறார்கள்? இவற்றை மேலும் அதிகமாக விளக்க நான் பிரியப்படவில்லை. நான் இங்கு எடுத்துக்காட்ட விரும்புவதெல்லாம், பிரிட்டிஷாரின் சுரண்டலைவிட மற்றொரு கொடுமையான வேதனைக்கும் சென்னைமக்கள் சென்ற அரைநூற்றாண்டாக ஆளாகி வந்திருக்கிறார்களென்பதைத்தான்.

இது நாளாவட்டத்தில் வெறும் பொருளாதார சுரண்டலோடு மட்டும் நின்றுவிடாது. கிழக்கு இந்திய கம்பெனியார், இங்கு வரும்போது வாணிபத்திற்காக என்று தான் சொன்னார்கள். பின்னால், மனிதவர்க்கத்தில் ஐந்தில் ஒரு பகுதி மனித சமூகத்தைக்கொண்ட ஒரு பெரிய சாம்ராஜ்யத்தை கிழக்கே நிறுவஇந்தியா உதவவில்லையா? இப்பொழுது பாரம் தாங்கமுடியாமல் அந்த சாம்ராஜ்யம் தானாகவே மூறிந்துவிழுகிறது. இந்த நிலையில், மீண்டும் சேரசோழபாண்டியர்கள் ஆண்டதிராவிட நாட்டில் பனியா-பண்டித சாம்ராஜ்யம் ஏற்பட வேண்டாம்!

## இதுவா மாகாண சுதந்திரம் ?

திராவிடர்கள் தங்கள் பரம்பரை சுதந்திர வேட்கையை 1946-ம் வருஷம் துவக்கத்திலே எடுத்துக்காட்டியுள்ளார்கள். வடக்கேயிருந்தவந்த ஆணையைமீறி ரகாசம் மந்திரிசபை நிறுவப்பட்டது. 1946 மே-மாதம் முதல் அதிகாரத்தைக்கைப்பற்ற ஆந்திரகேசரிக்கும் தமிழர் சர்வாதிகாரிக்கும் போட்டி நடந்தது. வடநாட்டு தலைமை பீடத்திற்கு தூபம்போட ஆரம்பித்தனர். இதன் விளைவு ஒருவர் பதவியிழக்கவும் மற்றொருவர் பதவிபெறவும் ஆன நிலைஏற்பட்டது; வடநாட்டுக்கைப்பாவையாக பிறகு மாறிவிட்டது. இத்தகையமந்திரிசபை மாகாண சுயஆட்சியுடன் கூடியது என்று பெயராலாவது சொல்லமுடியுமா? சட்டசபை உறுப்பினர்களுக்கோ அவர்களின் தலைவர்களுக்கோ மந்திரிசபையைத் தேர்ந்தெடுக்கும் உரிமைகிடையாது. மேலிடம் பொறுக்கி எடுக்கவேண்டும், பிரதம மந்திரியாருக்கும் தமது மந்திரிசபையில் எவ்வளவு மந்திரிகளை சேர்த்துக்கொள்வது என்று முடிவுசெய்து கொள்ளவும் இயலாது. மேலும் இரண்டு மந்திரிகள் தேவைப்பட்டால் அனுமதியில்லை, இருக்கிற மந்திரிகளைக்கொண்டே காரியத்தை நடத்திக்கொள்ளுமாறு கட்டளைபிறப்பிக்கப்பட்டது. அடுத்தாற்போல், பார்லிமெண்டரி காரியதரிசிகள் வேண்டுமென்றுகோரப்பட்டது. பிரகாசம் மந்திரிசபையில் 15 பார்லிமெண்டரி காரியதரிசிகள் இருந்தார்கள் என்றும், இப்பொழுது தாம் சிலரைவைத்துக்கொள்ள விரும்புவதாகவும் இன்றைய பிரதமர் ஓமாந்தூரார் விரும்பினார். வடநாட்டுதலைமைப்பீடம் "பார்லிமெண்டரிகாரியதரிசிகளை வைத்துக்கொள்ள தகுதியில்லை; உங்கள் கோஷ்டியை அதிகப்படுத்தமுடியாது, என்று பதிலளித்தது. பிரிட்டிஷ் ஆட்சியின்கையிலே, மாகாண சர்க்காரின் தலைவர் கவர்னர் என்ற நிலையிருக்கையிலேயே சென்னை சர்க்காரின் நிலைமை இதுவானால், அடுத்தாற்போல், பிரிட்டிஷ் ஆட்சியும் பிரிட்டிஷ் பிரதிநிதியும் நீங்கின பிறகு வடஇந்தியர் கவர்னராக

வருவதை எந்தசக்தி தடுக்கமுடியும்? வடஇந்தியர்களைக் கொண்டே மந்திரிசபையோ கலப்பு மந்திரிசபையோ ஏற்படாமல் இருக்கமுடியுமா? அவர்கள்யாவரும் கலப்பட மற்ற சுத்ததேசிய வாதிகளன்றோ? உங்களால் ஆட்சேபிக்க முடியாது.

எதிர்காலத்தில் என்ன நடக்குமென்பதற்கு இப்பொழுதே அறிகுறி தென்படுகிறது. இந்தியாவின் அரசியலை இந்துஸ்தானியில் வகுப்பதென அரசியலமைப்புசபைமுடிவு செய்திருக்கிறது. இத்தீர்மானத்தின் அறியாமை யாருக்கும் விளங்கும். அரசியலமைப்புசபை வகுக்கும் எந்தத் திட்டமும் பிரிட்டிஷ் பார்லிமெண்டால் ஏற்றுக்கொள்ளப் பட்டு சட்டமாக்கப்படவேண்டும். ஆங்கில மொழி பெயர்ப்பை பிரிட்டிஷ் பார்லிமெண்டு சட்டமாக்காது. மொழிபெயர்ப்பு ஏற்றுக்கொள்ளப்பட்டு சட்டமாக்கப் பட்டால், ஆங்கில மொழிபெயர்ப்பு வாசகங்கள் தான் சட்டமேயொழிய ஹிந்துஸ்தானி வாசகங்களல்ல. அல்லது இவ்வரசியலமைப்புச்சபை தான் ஆதிபத்தியஸ் தாபனமென்றும், தான் நிறைவேற்றும் திட்டங்களை பார்லி மெண்டு சட்டமாக்கவேண்டியதில்லையென்றும் தப்பாக எண்ணியிருக்கவேண்டும், அது எப்படியோ போகட்டும், ஹிந்துஸ்தானியை நம்மீது திணிக்க இது கொல்லைப்புற வழி என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. இம்முயற்சியை நாம் எப்படியாவது மறுத்துவிடவேண்டும். ஹிந்துஸ் தானியில் அரசியல் வகுப்பதைகண்டித்து நான் சமீபத்தில் அறிக்கை வெளியிட்டிருந்தேன். அதை ஆதரித்து மெயில் பத்திரிகை எழுதிற்று. அதில், அரசிலமைப்புசபை இவ்வாறுசெய்த முடிவானது, ஹிந்துஸ்தானிபேசும் நாடுகளிடையே ஐக்கியம் ஏற்படுத்த செய்யப்பட்ட தென்றும், வேறுமொழிகள்பேசும் பகுதிகள் தனி அரசியலை ஏற்படுத்திக்கொள்ள இடமளிக்கப்பட்டுள்ளதென்றும் விளக்கம் தரப்பட்டிருக்கிறது. இதுசரியானவிளக்கம் என்றே நான்கருதுகின்றேன். இதே நோக்கத்துடன்

அவர்கள் செய்தார்களோ இல்லையோ நாம் இதை உறுதிப்படுத்திக்கொண்டு, திராவிடநாட்டுக்குத்தனி அரசியலை வகுக்கவேண்டும்.

அதற்குக் காலம் நெருங்கிவிட்டது. அதிக நாள் இல்லை. நாம் ஒன்றுபட்டுழைக்க முன் வரவேண்டும். உண்மையான திராவிடன் ஒவ்வொருவனும், தான் எந்த அரசியல் கட்சியைச் சேர்ந்தவனாயினும் சரி, எக் கொள்கையையுடையவனாயினும் சரி ஒன்றுபட்டு இப் பொது லட்சியத்திற்காகப் போராட முன் வரவேண்டும். அப்பொழுது தான் அது நமக்குப் பெருமையளிக்கக் கூடியதாகயிருக்கமுடியும், உலகமும் நம்மை பழிக்காது, திராவிடரின் பலம் பெருமை குன்றாது, வருங்கால சந்ததிகளும் நம்மைத் தூற்றமாட்டார்கள்.

## திராவிடநாடா? தமிழ்நாடா?

திராவிட நாடா? தமிழ் நாடா? என்ற பிரச்சினை ஒன்று இருந்து வருகிறது. இது அவசிய மற்றதென்றே கருதுகின்றேன். இரண்டும் ஒன்று தான் என்பதை அப் பிரச்சினையை நன்கு உணர்ந்தவர்கள் சிறிது காலத்தில் நன்கு புரிந்துகொள்ளலாம். தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய மொழிகள் தமிழ் மொழியிலிருந்து பிரிந்தவைகள் என்பதும், இந்நான்கு மொழிகள் வழங்கும் பகுதிகள் தான் தமிழ் நாடு என வழங்கப்பட்டு வந்தது என்பதும் எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்டதாகும். தமிழ் நாடு என்றாலும் திராவிடநாடு என்றாலும் ஒன்று என்றபோதிலும் இன்றைய நிலையில், தமிழ் நாடு என்றால் ஒரு குறுகிய நிலபரப்பைக் குறிப்பதாக இருப்பதால், குழப்பத்தைத்தவிர்க்க திராவிடநாடு என்று அழைக்கிறோம். தனித் தமிழ் நாடு அல்லது திராவிநாடு வேண்டுமென பத்தாண்டுகளுக்கு முன்னிருந்தே கேட்டுவருகிறோம். 1939-ல் தூத்துக்குடியில் என் தலைமையில் நடைபெற்ற தமிழர் மாநாட்டிலே தமிழ்நாடு என்று கேட்பது, உண்மை

பிலே திராவிடநாட்டையே குறிக்கும் என்பதாக தெளிவு படுத்தப்பட்டிருக்கிறது. தமிழ்நாடு தமிழருக்கே என்ற நமது கோரிக்கையை சிலர் 'எலி வளை எலிகளுக்கே' என்று கேலி செய்தார்கள். "ஆம், எலி வளை எலிக்குத்தான்—பாம்பு புகமுடியாது" என்று பதிலளித்தோம். ஆனால், இப்பொழுதோ அந்நிலைமையும் மாறிவிட்டது. அன்று நையாண்டி செய்தவர்கள் இன்று வேண்டுகோள் விடுக்கின்றனர்.

திராவிடநாடு அல்லது திராவிடஸ்தான் என்பது—தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய நான்கு மொழி மொழிவாரிப் பிரதேசங்களும் சேர்ந்தது. இவை நான்கு பிரதேசங்களும் தனித்தனியாகவோ, இரண்டு, மூன்று அல்லது நான்கும் சேர்ந்தோ ஒரு பெடரேஷன் கீழ் இருந்துவரும். இந்த பெடரேஷன் ஆதிபத்திய உரிமையோடு டெல்லியுடனோ அல்லது மாகாணத்துக்கு வெளியே எந்த நாட்டுடனே அடிமை என்ற தொடர்பு இல்லாமல் இருக்கும். இன்னும் விளக்கமாகச் சொல்ல வேண்டுமானால், இந்த பெடரேஷன், வேறு எந்த பெரிய நாட்டின் பகுதியாகவோ, கூட்டு பெடரேஷனின் ஒரு பகுதியாகவோ இருக்காது. தமிழ்நாடு வேண்டும் என்று கேட்பவர்களின் கருத்து, தமிழ்நாடு வேறு மொழிப் பிரதேசங்களிலிருந்து பிரிந்து வாழவேண்டுமென்று எண்ணுகிறார்கள் என்றே கருத வேண்டியிருக்கிறது. ஏனெனில், தமிழ்நாடு கேட்கிறவர்கள், தனித்துவாழப் பிரியப்படுகிறார்களா, வேறு மொழி பிரதேசங்களுடன் பெடரேஷன் அமைத்துக்கொள்ள விரும்புகிறார்களா என்பது விளக்கமில்லை. மேலும் மத்திய யூனியன் சர்க்காரின் கீழிருப்பதா அல்லது சுதந்திரமாக இருப்பதா என்பதும் விளக்கமில்லை. மத்திய யூனியன் சர்க்காரின் கீழ் இருக்கவேண்டுமென அவர்கள் கருதுவார்களேயானால், தமிழ்நாடு கேட்பவர்களுக்கும், திராவிடஸ்தான் கேட்பவர்களுக்குமிடையே அடிப்படை வேறுபாடு இருக்கிறது.

ஆனல் என் தமிழ் சகோதரர்கள் இன்னும் அடிமையாக இருக்க விரும்பமாட்டார்கள் என்றே நம்புகின்றேன். இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி தோன்றியதிலிருந்து நாம் பிரிட்டிஷாருக்கு அடிமையாயிருந்து வருகிறோம்; காங்கிரஸ் ஆதிக்கம் வகிக்கத் துடங்கியதிலிருந்து வடஇந்தியருக்கு அடிமையாயிருந்து வருகிறோம். பிரிட்டிஷாரின் பிடியிலிருந்து விலகிய பிறகும், வடநாட்டு மார்வாரிகளுக்கும் குஜராத்திகளுக்கும் பனியாக்களுக்கு மட்டும் மேலும் அடிமையாகயிருக்கவேண்டுமா? இந்நிலைமை ஏற்படக் கூடாது என்று தான் திராவிடர்களாகிய நாம் கூறுவது. அதற்காகவே, திராவிடம் தனி நாடாக, முழு சுதந்திர நாடாக இருக்கவேண்டுமென விரும்புகிறோம். அடுத்த படியாக, மத்திய யூனியன் சர்க்காருடன் சேர்ந்திருப்பதா தனித்திருப்பதா என்ற பிரச்னைக்கே இப்பொழுது அவசியமில்லை. இன்றுள்ள முக்கியப் பிரச்சினை, நான்கு மொழிப் பிரதேசங்களும் தனித்தனியாக இருப்பதா சேர்ந்து ஒரு பெடரேஷனுக இருப்பதா என்பது. தனித்தனியாக இப் பிரதேசங்கள் வாழ விரும்பினுல் வாழட்டும் அதுபற்றி நமக்கு ஆட்சேபனையில்லை. மலபார், திருவிதாங்கூர், கொச்சி ஆகியவைகள் ஒரு ஐக்கியமாக சேர்ந்து இருக்க விரும்பினர்கள். திருவிதாங்கூர் திவான் சர். சி. பி. ராமசாமி அய்யர் இதை ஆட்சேபித்திருக்கிறர். திருவிதாங்கூர் சுதந்திரமாக இருக்குமெனக் கூறுகிறர். திருவிதாங்கூர் இல்லாமல், மலையாளம் கொச்சியுடன் சேர்ந்து ஒரு ஐக்கியமாக இருக்க ஒப்பாது. தென் கன்னடம் மைசூர், பம்பாய் மாகாணத்தின் கன்னடப் பகுதிகள் ஒப்படைக்கப்பட்ட ஜில்லாக்களின் சில பகுதிகள் எல்லாம் சேர்ந்து ஒரு தொகுதியாகலாம். ஆனல் மைசூர்இதற்கு இணங்கவேண்டும் இல்லையேல் அத்தொகுதி பலமுள்ளதாக இருக்க முடியாது. தெலுங்கு நாட்டைப் பொறுத்தமட்டில் ஒன்றும் சந்தேகமில்லை, அது ஒரு பலமுள்ள தொகுதியாக விளங்கமுடியும். ஆனல் ஒப் படைக்கப்பட்ட (ceded) ஜில்லாக்களும் சித்தூர், நெல்லூர்

ஜில்லாக்களும் ஆந்திரர்களுடன் சேர்ந்திருக்க விரும்ப வில்லையென்று தெரிகிறது. வடநாட்டுடன் சேர்ந்து வாழ்வதைவிட திராவிட நாட்டின் மற்றப் பகுதிகளுடன் சேர்ந்து வாழ விரும்புவார்கள் என்று நம்புகிறேன். நான் அவ்வாறு நினைப்பது தவறு என்றால், எனக்காகவும் அவர்களுக்காகவும் வருந்துகிறேன். நமது வேண்டுகோள்களையும், விண்ணப்பங்களையும், பணிந்த உரைகளையும் பொருட்படுத்தாமல் நம்மைவிட்டுப் பிரிந்துபோக எண்ணுவார்களேயானால், நாம் என்செய்வது? அவர்களுக்காக அனுதாபப் படவேண்டியதுதான்.

ஆகவே திராவிடஸ்தான் கோருபவர்களுக்கும் தமிழ்நாடு கோருபவர்களுக்குமிடையில் உண்மையாக எத்தகைய வேறுபாடுகளும் இல்லை. உண்மையாகவும் இருக்கவும் முடியாது. எனவே, என் சகோதரர்கள், இவ்விஷயத்தைக் குறித்து மீண்டும் சிந்தித்துப்பார்த்து ஒன்றுபட்டு, நமது பொது எதிரிகளான அன்னியனிடமிருந்தும் வட இந்தியரிடமிருந்தும் விடுதலைப்பெற்று சுதந்திரமடைய போராட முன்வரமன்றாடிக் கேட்டுக்கொள்கிறேன். அப்பொழுதுதான் நாமும் நமது சந்ததிகளும் எதிர்காலத்தில், திராவிடநாட்டில் சுதந்திர மக்களாய் வாழமுடியும்.

1947-ம் வருடம் மே மாதம் 30-ம் தேதி சென்னை கோகலே மண்டபத்தில் தமிழ்நாடு மகாநாடு திருவாளர் C. N. முத்துரெங்க முதலியார் தலைமையில் நடைபெற்றது. திரு. T. S. அவிநாசிலிங்கம் செட்டியார் திறந்து வைத்தார்; சட்டசபைத் தலைவர் திரு. J. சிவசண்முகம் பிள்ளை கொடியேற்றினார். அம்மகாநாட்டில், தமிழ்நாட்டுக்குத் தன் அரசியலை வகுத்துக்கொள்ள உரிமையிருக்கிறதென்றும், அவ்வரசியல் தமிழில் இருக்கவேண்டுமென்றும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டிருக்கிறது. அம்மகாநாட்டில் கலந்துகொண்ட மூன்று பிரமுகர்களும் காங்கிரசில் பிரபலமானவர்கள். அதனால், இவ்வாறு தீர்மானம் நிறைவேறுவதற்கு காங்கிரசின் அங்கீகாரம் அல்லது தமிழ்நாடு

காங்கிரசின் அங்கீகாரமாவது இருந்திருக்கும் என்று ஊகிக்கவேண்டியிருக்கிறது. மேலிடத்தைக் குறித்துக் கவலையில்லை. இதுமட்டுமல்ல, மற்றும் இதற்கு முன்னும் பலகாங்கிரஸ் கூட்டங்களில் தமிழ்நாடு பிரிக்கப் படவேண்டுமென்று தீர்மானம் நிறைவேற்றப் பட்டிருக்கிறது.

சென்ற மே மாதம் 30ம் தேதி டில்லியில் நடத்திய வழிபாட்டுக் கூட்டத்தில் மகாத்மா, பிராமணர்கள், க்ஷத்திரியர்கள், வைசியர்கள், ஆகியவர்கள்தான் ஜாதி ஹிந்துக்கள் என்றும், சூத்திரர்கள் ஜாதிஹிந்துக்களல்ல என்கிறார் சூத்திரர்கள் ஜாதி ஹிந்துக்களல்லவென்றால், ஜாதி ஹிந்துக்கள் சிறு மைனாரிட்டியினராகத்தானிக்கமுடியும். இது ஒருபுறமிருக்க இக்கூற்றிலிருந்து, சூத்திரர்கள் ஜாதியிலிருந்து நீக்கப்பட்டவர்கள் அல்லது ஜாதியற்றவர்கள் என்பது விளங்கும். இந்தியாவில் இப்பொழுது இரண்டு ஜாதிகள் பிரிவுகள்தான் இருப்பதாக பொதுவாக கருதப்படுகிறது. அதாவது (1) பிராமணர்கள் (2) சூத்திரர்கள். க்ஷத்திரியர் ஜாதியும் வைசியஜாதியும் மறைந்துவிட்டன. இதை ஹைகோர்ட்டும் ஒப்புக்கொண்டுள்ளது.

பாட்னா ஹைகோர்ட்டுமுடிவுமட்டும் வேறுவிதமாகவுள்ளது. காயஸ்திரிசாதியினர் க்ஷத்திரியர்கள் என்று முடிவுசெய்திருக்கிறது. சென்னை மாகாணத்திலுள்ள ஒருவர், தாம் எவ்வளவு உயர்ந்த ஜாதியைச்சேர்ந்தவர் என்று பெருமையாக எண்ணிக்கொண்டாலும், பிராமணர்களைத்தவிர மற்ற எவரும் சூத்திரர்களே. நீங்கள் உங்களை பிள்ளைமார்கள்என்றோ, செட்டியார்என்றோ, நாயக்கர் என்றோ, முதலியார்என்றோ, ஆதிதிராவிடர்என்றோ, அல்லது வேறு எந்தச்சாதியைச்சேர்ந்தவர்என்றோ எண்ணிக்கொண்டாலும் நீஙகள் யாவரும் சூத்திரர்களே. எனவே, கடவுள்மொழியாகிய ஹிந்துஸ்தானியில் வகுக்கப் போகும் அரசியலில் 'சூத்திரர்களாகிய நாம் கலப்பதால்

அவர்களின் பரிசுத்தத் தன்மைகெட்டுப்போய்விடு மல்லவா? என் பாவம்? நாம் தனியாகயிருந்து நமது அரசியலை வகுத்துக்கொள்வோம்! அதற்காக நீங்கள் ஒன்றுபட்டுழைக்க முன்வரவேண்டும். ஆந்திரர்களும், மலையாளிகளும், கன்னடியர்களும் மொழிவாரியாக மாகாணம் பிரிக்கப்படவேண்டுமென கிளர்ச்சிசெய்து வருகின்றனர். இக்கிளர்ச்சிகளை காங்கிரஸ் ஆதரித்து வருகிறது. அதாவது அவர்களது கோரிக்கைக்கு காங்கரஸ் இணங்கிவிட்டது. மலபாரிலுள்ள மாப்பிளைமார்கள் மாப்பிளைஸ்தான் கேட்கின்றனர். வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தின் பட்டாணியர்கள் பட்டாணி ஸ்தான் அமைத்துக்கொள்ள கோரிக்கைவிடும்போது, இவர்கள் (மாப்பிளைமார்கள்) கோரிக்கையை கண்டு யார் தான் ஆச்சரியப்படுவதற்கு இருக்கிறது.

கடந்த மே மாதம் 29-ம் தேதி நடந்த சென்னை மாகாண முஸ்லிம்லீக் மகாநாட்டில், கர்னாடகம், கர்னாடக நவாப்குடும்பத்தாரிடம் ஒப்புவிக்கவேண்டும் என்று தீர்மானம் நிறைவேற்றப்பட்டிருக்கிறது. 1801-ம் வருடம் கிழக்கு இந்திய கம்பெனிக்கும் கர்னாடக நவாபுக்கும் நடந்த ஒப்பந்தப்படி, நாட்டை நிர்வகிக்கும் பொறுப்பு கிழக்கிந்திய கம்பெனிக்கு ஒப்புவிக்கப்பட்டதாகவும், கம்பெனியாரிடமிருந்து அதிகாரத்தை பிரிட்டிஷ்மன்னர் சர்க்கார் ஏற்றுக்கொண்டதினல், அவ்வொப்பந்தப்படியே நிர்வகித்து வரப்படுகிறதாகவும், இப்பொழுது பிரிட்டிஷ் சர்க்கார் தங்கள் அதிகாரத்தைவிட்டு விலகிக்கொள்வதால், நாட்டை உரியவர்களிடமே ஒப்புவிக்கவேண்டும் என்றும் காரணம் காட்டப்படுகிறது.

எனவே, இவ்வளவு தூரம் மேலே எடுத்துக்காட்டியதி லிருந்து, இம்மாகாண மக்கள், இம்மாகாணத்திற்கு வெளியே யாருடைய ஆதிக்கத்தின் கீழும், பிடியின் கீழும் வாழப்பிரியப்படவில்லை யென்பதே நன்கு விளங்கும்.

இவை யாவும் பிரிவினைக்குப் போதாதென்றால், சர்வஜன வாக்கு எடுக்கவேண்டும் என்பதைத் தவிர வேறு வழியென்ன இருக்கிறது? இன்றுள்ள சட்டசபை, மக்களின் சரியான பிரதிநிதித்துவ சபையாகாது. ஏனெனில், குறிப்பிட்ட ஒரு சிலரால் தெரிந்தெடுக்கப்பட்டவர்கள் தான் அதன் உறுப்பினர்களாக இருந்து வருகிறார்கள். மேலும், அந்நாளில் "பிரிட்டிஷார் நாட்டை ஆளுகிறார்கள். அவர்கள் அன்னியர்கள். அவர்களுக்கு மக்களின் நலனைப்பற்றிக் கவலையில்லை; பொருளாரத்தைக் குறித்துச் சிந்தனையில்லை. ஆதலால் அவர்களுடன் ஒத்துழைக்கவில்லை" என்று கூறினார்கள். அதனால் இவர்கள் தான் தங்களை காப்பாற்றக் கூடியவர்கள் என்று மக்கள் நம்பினார்கள். யுத்தம் துவங்கியது, காங்கரஸ் மந்திரிகள் தங்கள் பொறுப்பைத் தட்டிக் கழித்துவிட்டு வெளியேறினார்கள். 'குவிட் இந்தியா' (இந்தியாவை விட்டு வெளியேறுக) என்ற தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. அதற்குப்பின் நடந்தது உங்களுக்குத் தெரியும். அவைகளைக் குறித்து இங்கு விளக்கப் பிரியப்படவில்லை. அப்பொழுது நடந்த நிகழ்ச்சிகளுக்கெல்லாம், தாங்கள் பொறுப்பாளர் அல்லவென்று காங்கரஸ்காரர்கள் அன்று சொன்னபோதிலும், இப்பொழுது அவைகளைக்கொண்டு தான் பெருமையடைகிறார்கள். பிரிட்டிஷ் சர்க்காரும் யுத்தத்தின்போதும், யுத்தம் முடிந்த பிறகும் காங்கிரசிடம் தனிச்சலுகைக் காட்டி வந்திருக்கிறார்கள். இவ்வாறு நடந்துகொண்டதானது, அவர்களுக்கு உதவிசெய்தவர்களிடத்தில் எவ்வளவு தூரம் நன்றிகெட்டத் தன்மையில் நடந்துகொண்டார்கள் என்பதோடு எவ்வளவு நாணயக்குறைவானக் காரியம் செய்து தங்களை விடுதலையளித்துக்கொள்ள விரும்புகிறார்கள் என்பதையும் எடுத்துச் சொல்லவேண்டியதில்லை. பஞ்சத்தில் சிக்குண்ட மக்கள் எதையும் செய்யத் துணிவர் என்பதற்கிணங்க இவர்களது செய்கை இருக்கிறது என்பதைத் தவிர வேறு என்ன சொல்லமுடியும் இதற்கிணையாக? சர்க்காரே இவ்வாறு நடந்துகொள்ளும்போது, பாமர மக்கள் காங்கரஸ் பக்கம்

சாய்கிறார்களே என்றால் அதில் எவ்வாறு ஆச்சரியம் இருக்கமுடியும்.

சர்க்காரின் இச்செயலைக் கண்டிக்கும் அறிகுறியாக இதரகட்சிகள் தேர்தலில் கலந்துகொள்ள மறுத்துவிட்டன. அதனால் காங்கரசுக்கு தேர்தலில் எதிர்ப்பேயில்லாது போய்விட்டது. எனவே சென்னை சட்டசபையிலுள்ள உறுப்பினர்களோ, அரசியல் நிர்ணய சபையிலுள்ள சென்னைப் பிரதிநிதிகளோ இம்மாகாணப் பிரதிநிதிகள் என்று சொல்லுவது உண்மைக்கு மாறானது.

## பொருளாதாரம்

அடுத்தபடியாக, திராவிடநாடு போதுமான பொருளாதாரபலம் மிக்கதுதானா என்றும் எண்ணிப்பார்க்க வேண்டும். அவ்வாறு எண்ணிப் பார்ப்போமேயானால், திராவிடநாடு பொருளாதாரமிக்க நாடு என்றே தெரிய வரும். இம்மாகாணத்தின் 1946—47ம் வருடத்தில் திட்டமிடப்பட்ட வருமானம் 41.44 கோடி ரூபாய். பிறகு வெளியான அறிக்கையின்படியும் போடப்பட்டத் திட்டத்தின்படியும் சுமார் 57 கோடி ரூபாய் வருமானம் கிடைக்கும் என்று தெரிகிறது. வங்காளம் பம்பாய் மாகாணங்களைவிட சென்னைக்கே அதிக வருமானம்கிடைக்கிறது. பெரிய மாகாணம் என்று சொல்லப்படும் பஞ்சாப் மாகாணத்தின் வருமானம் 22.5 கோடி ரூபாய்தான். இந்தியாவில் உள்ள இதர மாகணங்களின் வருவாய்களை எல்லாம் ஒன்றுசேர்த்தால், மொத்தம் எவ்வளவு ஆகிறதோ அதில் ஐந்தில் ஒருபங்கு சென்னை மாகாணத்தின் வருமானமாகும். அதுபோலவே, இந்திய சர்க்காருக்கு கிடைக்கிற மொத்த வருமானத்திலும், இம்மாகாணத்திலிருந்து இந்திய சர்க்காருக்குக் கிடைக்கிற வருமானமும் ஐந்தில் ஒரு பங்காக இருப்பதையும் காணலாம். இந்திய சர்க்காரின் 1946—47ம் வருடத்தின் மொத்த வருமானம் 307 கோடி ரூபாய். இதில் சென்னை மாகாணம் இந்திய சர்க்காருக்கு செலுத்தியுள்ளது 61·4 கோடி ரூபாய். எனவே

சென்னை மாகாணம் மத்திய சர்க்காரின் தொடர்பு இல்லாமல் தனிச் சுதந்திர நாடாக ஏற்பட்டுவிட்டால், இதன் மொத்த வருமானம் வருடமொன்றுக்கு 101·84 கோடி ரூபாய் கிடைக்கும். எப்படிப்போனாலும், 100 கோடி ரூபாய்க்குக்குறையாது. ஆனால் நாட்டில் மக்கள் வரிப் பளுவால் துன்பப்படுவதும் தெரியும், "வரிதாங்க முடியாததாகயிருக்கிறது, வரிகளை ஒழிக்கவேண்டும்" என்று காங்கரசார் முதலைக்கண்ணீர் வடித்ததையும், 1937 முதல் 1939 வரை காங்கரசார் ஆண்டகாலத்தில் ஒரு வரியையும் குறைக்காததோடு வரிமேல் வரி விதித்து வந்ததையும் யாரும் மறந்திருக்கவுமுடியாது நாமும் மறக்கவில்லை. எனவே, மக்களை அமிழ்த்திவரும் சிலவரிகளை நீக்கவேண்டும்; சிலவரிகளை குறைக்கவேண்டும். இதனாலும், வருமானம் குறைந்துவிடாது. எவ்வாறெனில், வரி விதிக்கப்பாடாத எவ்வளவோ சாதனங்களிருக்கின்றன. அவைகளை ஆராய்ந்துபார்த்து வரிவிதிக்கலாம். எதிர் பார்க்கும் 100 கோடிரூபாய் வருமானம் நிச்சயம் கிடைக்க வழியிருக்கிறது.

## இராணுவ பாதுகாப்பு

இனி, அடுத்தபடியாக யோசிக்க வேண்டிய பிரச்சினை பாதுகாப்பு' ஆகும். ஐக்கிய நாடுகள் ஸ்தாபனம்போன்ற ஒரு ஸ்தாபனம் நிரந்தர இராணுவத்தோடு கூடியதாக இந்தியா முழுமைக்கும் அமைவதென்பது இயலாத காரியம். இங்கு பாதுகாப்பு ஏற்பாடுகளைப்பற்றி விளக்கி எழுதப் பிரியப்படவில்லை. திராவிடநாடு தனி நாடாகப் பிரிந்து விட்டால், தனிப்பட்ட முறையில், சுதந்திர தரைப்படை, கடற்படை, விமானப்படை முதலிய பல்வேறு படைகளை அமைத்துக்கொள்ளலாம்; அல்லது வேறு நாடுகளுடன் தொடர்பு வைத்துக்கொண்டு பாதுகாத்துக்கொள்ளலாம். அயர்லாந்தின் பாதகாப்புச்செலவு மிகக்குறைவே. அது போல, நம்நாட்டின் பாதுகாப்புச் செலவும் ஆண்டு ஒன்றுக்கு 25 கோடி ரூபாய்க்கு மேற்போகாமல் பார்த்துக்

கொள்ளலாம். எஞ்சிய 75 அல்லது 80 கோடி ரூபாயைக் கொண்டு மிக மிக நல்லமுறையில் நிர்வாகத்தை நடத்திச் செல்லலாம், மக்களின் நல்வாழ்வுக்கான பல நலன்களைச் செய்யலாம். இச்சமயத்தில் சேமிப்பு நிதியாக 25 கோடி ரூபாயிருப்பதையும் எடுத்துக்காட்ட ஆசைப்படுகிறேன்.

நமது திராவிடஸ்தான் கோரிக்கைக்கு எதிர்ப்பு இல்லாமல் இல்லை. பாகிஸ்தானுக்கு என்ன எதிர்ப்பு கூறப்பட்டதோ அதே எதிர்ப்பு தான் இதற்கும் கூறப் படுகிறது. அவ்வெதிர்ப்பு வாதங்கள் யாவும் ஜூன் 2-ந் தேதி அறிக்கைக்குப் பின் ஒழிந்துபோய்விட்டன. எனவே திராவிடஸ்தான் எதிர்ப்புகளைக்குறித்து யாரும் இலட்சியம் படுத்தவேண்டாம்.

பிரிட்டிஷ் மந்திரிசபையின் தூது கோஷ்டியின் திட்டப்படி, சென்னை 'அ' பிரிவில் சேர்க்கப்பட்டிருக் கிறது. இப்பிரிவில் பீஹார், பம்பாய், மத்திய மாகாணம் ஆகியவைகளும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இம்மாகாணப் பாகிஸ்தானல்லாத மாகாணங்கள் என்பதைத் தவிர, இவ்வாறு ஒன்ருக சேர்த்து பிரித்திருப்பதின் நோக்க மென்ன? அத்திட்டப்படி அரசியல் நிர்ணயசபையிலுள்ள இக்கோஷ்டியைச் சேர்ந்த பிரதிநிதிகள் ஒன்றுகூடி. இக் கோஷ்டிக்கான ஒரு அரசியலை வகுக்கவேண்டும். பிறகு புதிய அரசியலமைப்பின்படி அந்தந்த மாகாண சட்ட சபைகளுக்குத் தேர்தல் நடைபெற வேண்டும். அத்தேர் தலில் தெரிந்தெடுக்கப்படுகிறவர்கள், இக்கோஷ்டியில் சேர்ந்திருப்பதா அல்லது இவ்வரசியலுக்கு உட்பட்டிருப் பதா என்பதை முடிவு செய்யவேண்டும். ஏன் இவ்வளவு சுற்றுவழி? தலையைச்சுற்றி ஏன் தொடவேண்டும்? மேலும் 'அ' பிரிவிலுள்ள பிரதிநிதிகள் எல்லாம் காங்கிரஸ்காரர் களாயிருப்பதால், அவர்கள் வகுக்கும் புதுத்திட்டத்தில், சட்ட சபைகளுக்கு நடைபெறும் தேர்தல்முறை தங்கள் எண்ணம் ஈடேறத்தக்கதாக, அவர்களுக்குப் பிடிக்காத நம்போன்றவர்கள் சட்டசபைகளில் நுழையவிடாத விதத்

தில், வகுத்துக்கொள்வார்கள். அதனுல், புது அரசியலமைப்பின்படி தேர்தல் எவ்வாறு நடக்கும்? அதன் முடிவு எவ்வாறு இருக்கும் என்பது இப்பொழுதே தெரிந்துகொள்ளலாம். எனவே, இப்பொழுதே நாம், ‘அ’ பிரிவில் கலந்து கொள்வதில்லை யென்றும், அரசியல் நிர்ணய சபையிலுள்ள சென்னைப் பிரதிநிதிகள் ஒருவேளை அதில் கலந்துகொண்டால், அவ்வரசியல் நிர்ணயசபை வகுக்கும் எத்திட்டமும் நம்மைக் கட்டுப்படுத்தாது என்றும் முடிவுசெய்யவேண்டும்.

சமீபத்தில் வைசிராய் நடத்திய பத்திரிகை நிருபர்கள் மகாநாட்டில், வயது வந்தவர்களுக்கெல்லாம் வாக்குரிமையளிப்பதுதான் ஜனநாயகத்துவமாகும் என்று கூறியிருக்கிறுர். இம்முக்கியமான விஷயத்தில், 5 கோடி மக்களின் எதிர்காலவாழ்வைப்பொறுத்த ஒரு விஷயத்தில், அவசரக்கோலம் அள்ளித்தெளி என்ற மாதிரி அவசரப்பட்டு ஒரு காரியத்தைச் செய்யவிடலாமா என்பதை திராவிடர்களாகிய நாம் எண்ணிப்பார்க்கவேண்டும்.

எந்த மாகாணமாவது, இவ்வரசியல் சபையில்கலந்து கொள்ளவிரும்பவில்லை யென்றுசொல்ல உரிமையிருக்கிறதா என்று கேட்டகேள்விக்கு வைசிராய் பதிலளிக்கையில், இரண்டு அரசியல் நிர்ணயசபைகளில் ஏதாவதொரு அரசியல் நிர்ணயசபையில் சேருவதைத்தவிர வேறு விதமாக இருக்க தலைவர்கள் விரும்பவில்லை என்று கூறியிருக்கிறுர். அத்தலைவர்கள் யாராயிருந்தாலும் சரியே, அவர்கள் நமது பிரதிநிதிகளல்ல; அவர்களுக்கு நம்மைக் குறித்துபேச அதிகாரமேது? ஆதலால் அவர்கள் கருத்துக்குத்திராவிடர்கள் என்ன விரும்புகிறுர்கள் என்பதை நாடெங்கும் கூட்டங்கள்கூடி தீர்மானங்கள் நிறைவேற்றி திராவிடத்தலைவர் பெரியார் ஈ. வெ. ராமசாமி அவர்கள்மூலம் அனுப்பப்பட்டிருக்கிறது.

திராவிடநாட்டில் எல்லோருக்கும் சமநீதிவழங்கப்படும். பலமிக்கோர் பலவீனர் எவராயினும் சரி, எல்லோ

ருக்கும் நியாயமான அடிப்படையான உரிமைகள் அளிக்கப்படும். இதுபற்றி எவ்வகுப்பினரும் எவ்வித அச்சமும் கொள்ளவேண்டியதில்லை. அந்தந்தச்சமூகம் அதனதன் விகிதாச்சாரத்திற்குத்தகுந்த பலனை அடையும்; பலவீனமான சமூகத்திற்குசலுகைகள் நிச்சயமுண்டு. நீதி நியாயத்திற்குமாறாக எதுவும் செய்யப்படமாட்டாது.

நம்நாட்டை நாம் எப்பாடுபட்டேனும்பெறுவோம், நமது ஆட்சியை நாமேநடத்துவோம், நமக்குநாமே எஜமானர்களாயிருப்போம்; நாம்யாருக்கும் அடிமையாயிருக்கமாட்டோம் என்ற உறுதியில் திராவிடர்கள் ஒவ்வொருவரும் நம்பிக்கைகொள்ளுதல், அவசியம்.



## இதையும் சிந்தியுங்கள் !

இந்தியா ஒரு உபகண்டம். ஒரு நாடு அல்ல

ஐரோப்பாவில் மொத்தம் 32 நாடுகள் இருக்கின்றன. அவர்களும் அநேகமாய் அங்கு ஒரே சமூகத்தினர் இந்தியாவில் நாலாயிரம் ஜாதிகள், நாற்பத்தி எண்ணாயிரம் ரிஷிகள்.

பிரிட்டிஷார் இந்நாட்டில் காலடி எடுத்து வைக்குமுன் 56 அரசர்கள் இப்பரந்த கண்டத்தை ஆட்சி செய்து வந்திருக்கிறார்கள்.

பிரிந்து வாழ்வதென்பதும் புதிய சம்பவமல்ல. பிரிட்டிஷ் இந்தியா, பிரஞ்சுஇந்தியா, டச்சு இந்தியா, சுதந்திர சமஸ்தானங்கள் என இன்றுவரையும் தனித்தனி ஆட்சிகள் நடைபெற்று வருகின்றன.

மொத்தம் 574 சுதேச சமஸ்தான மன்னர்கள் ஆட்சி புரிகின்றனர்; இனியும் தனித்துவாழ விரும்புகின்றனர். அசோகர், கனிஷ்யர், ஹர்ஷர், சந்திர குப்தன் காலமுதல் மற்ற மொகல் அரசு ஈறாக இந்தியா ஒன்றென இருந்ததில்லை.

இமயம் முதல் கன்னியாகுமரிவரை ஒரே நாடு என்று ஆட்சி வசதிக்காக பிரிட்டிஷார் செய்ததை—கூறினர். இதையே தான் இன்று ஆரியர்—வடநாட்டாரும் விரும்புகின்றனர்.

திராவிடநாடு என்றுமேகோரும் நிலப்பரப்பு இந்தியாவின் ஐந்தில் ஒருபங்காகும். அதேபோல் பொருள்வளம், நிலவளம், கடற்துறைமுகங்கள் வரையும் கூட 5ல் 1 பங்கு இயற்கை வசதிகள் நிரம்பி இருக்கின்றன.

காங்கிரஸ் மொழிவாரி மாகாணக் கொள்கையை ஏற்றுக்கொண்டிருக்கிறது. ஆனல் திராவிடஸ்தான் என்பது தமிழ், மலையாளம், கன்னடம், தெலுங்கு ஆக நான்மொழிகளைக்கொண்ட ஒரு தனி கூட்டுத்தொகுதிதான்.

திராவிடநாட்டுக்கு வடக்கிலும், மேல்கீழ் எல்லைகளில் வாழும் மக்கள் பேசும் மொழிகள் திராவிட இனத்தைச் சேர்ந்தவைதான். வட இந்தியா பூராவும் திராவிட மொழி ஒருகாலத்தில் பரவி இருந்தென்பதற்கு ஆதாரமாக இன்றும் அவர்கள் பேசும் பல்வேறு பாஷைகளில் திராவிட ஒலிப்பண்புகளும், வேர்ச்சொற்களும், இலக்கிய அமைதிகளும் மிக இருக்கின்றன. ரிக்வேதத்திலேயும் திராவிட வேர்ச் சொற்கள் 11 இருப்பதாக அறியப்படுகிறது.

இந்தியாவின் புகழுக்குக் காரணமாக உள்ள கலைகள் சிற்பம், ஓவியம், இசை, நாட்டியம் முதலியவைகள் எல்லாம் திராவிட நாகரீகத்தின் அடிப்படையேயாகும்.

சீன பாஷையை 40 கோடி மக்கள் பேசுகிறார்கள். உருது—இந்தி மொழிகள் 6 கோடி மக்களால் பேசப்பட்டு வருகின்றன. திராவிடமொழியும் இதற்குக் குறையாத அதாவது 6 கோடி மக்களுக்கதிகம் பேசி வருகிறார்கள்.

ஆனல் உலக அரசியலில் ஆங்கிலமும், புதிய சுதந்திர சர்க்காரில் இந்தியும், சமயத்துறையில் வடமொழியும், இசையில் தெலுங்கு, உருதுவுமாய் ஏன் இருக்கவேண்டும்? அடிமையினின்று உதயமான ஐரோப்பா முதலில் கிரேக்க இலக்கியத்தையே தழுவி எழுந்தது. எனவே அடிமை மீளும் திராவிடம் எங்ஙனம் இந்தியை இலக்கியமாய்த் தழுவ முடியும்?

ராஜ தந்திரிகள்—நிர்வாக திறமைபடைத்த சகலர்களுக்கும் பஞ்சமில்லை. வடநாடு முக்கிய பதவிகளுக்கு கடன்வாங்கும்படி அவ்வளவு பெரிய உலக மேதைகள் இந்நாட்டில் தேவைக்கும் அதிகம்.

முஸ்லிம்கள் தனிசமுதாயம். அவர்களுக்கு பாகிஸ்தான் தனி அரசு என்றால் திராவிடர்கள் யார்? அவர்களுக்கும் வடநாட்டாருக்கும்—ஆரியர்களுக்கும் தொன்று தொட்டு நாளைமுடிய எல்லா வாழ்விலும் புறம்பானவர்கள் தானே! ஏன் ஆட்சேபம்?

ஹிந்துஸ்தானி பாஷையில் அரசியல் நிர்ணயம் என்பது திராவிடன் யாருக்குமே புரியாத மொழியாயிருக்கையில் எப்படி தன் அரசை திராவிடன் நிறுவியவனாக முடியும்?

இதனால்தான் கோருகிறோம் திராவிடஸ்தான். இதில் என்ன நியாயமான தடைகள்?

---

T. U. P. LTD., PARTY 7-8-47. 1,000 Copies